(இறகு)களையும் வண்டுகிளிக்கி அசைந்தசைந்து வணங்கியும், அடிமுடியைக் காணுதற் கரியனாய்ச் செறிந்துநின்ற சோதிசொரூபன், தம்மைச் சிறிதுந் தேடாதவன் நீர் என்று ஒன்றுந் தெரியாத பூர்வத்தே போந்தருளி அந்தணனாய், தனது அடிமுடிகளை மிக எளிதாய் எல்லாருங்காண மணப்பந்தரின்கண்ணே வந்து எங்கள் பிறப்பறுத்திட்டு எந்தாமும் ஆட் கொள்ளத் தள்ளாடிநின்று ஒருவராலுந் தள்ளக்கூடாத அடிமைவழக்கை ஒருவராலும் வெல்லக்கூடாத அருமையாயுள்ள தமிழால் எழுதப்பட்டுள்ள அடிமைப்பத்திரத்தைக் காட்டி அறைகூவி "இப்பத்திரப்படி சுந்தரா! எனக்கு உனது தாதை மூதாதை முதலிய யாவரும் அடிமையாகும். ஆகலின் நீயும் வழிவழியாய் வந்த எனதடிமையாகும். ஆகவே நீ இந்தமணப்பந்தரைவிட்டு என்பின்னே வந்து நான் இடும்பணி எதுவோ அதனை எனது ஆளாகச்செய்துவருவாய்" என்று வழக்கிட்டு ஆளப்பெற்றவர், தேன்வண்டுகள் தேனுண்டு ஒலிக்கின்ற நறுமணங்கமழும் மலர்மாலைசூடிய நம்பியாரூரன் என்னும் நாமமுடைய எம்பெருமானாகிய தேவரீரன்றோ ? என்று இத்திருப்பாசுரத்தால் கூறப்பட்டது.

தேவர்களிற் பெரியோராகிய அரிபிரமர்களால் பலகாலுந் தேடியுங் காண்டற்கரிய பெரியோனாகிய இறைவன் தம்மாட்டு மிக எளிமையாய் வலிந்துவந்து வழக்கிடும் ஆண் தன்மையுடைவர் என்பதுதோன்ற—மூசல்தேன் ஒழுகும் மலரின் நற்றார் எம்பிரான் நம்பியாரூரனே—என்றுகூறலுமாம்.

ஆவணங்காட்டிக் குடிமுழுவதும் வந்தாட்செய் எனப்பெற்றவன் என்றதனால் தில்லைவாழந்தணர்முதலாகச் சொல்லபபட்ட எழுவரையும் ஆவணங்காட்டியே இறை வன் ஆண்டஅருமை வெளிப்படுகின்றது. இதனுண்மையின் விரிவை இச்சருக்கத் தின் முதற்பக்கத்திற் காண்க.

இச் சருக்கமுதலில் தில்லைவாழந்தணராகிய நடராஜமூர்த்தியையும், இறுதியில் அமர்நீதியாரையும் வைத்து ஓதியது திருத்தொண்டத்தொகையின் சிறப்பைப் பிரகாசப் படுத்தி மாதவரெல்லாம் பிறவிப்பிணி நீங்கி உய்வதற்கேயாம்.

என்னையெனின், முதலில் உள்ள நடராஜமூர்த்தி, பிறவிப்பெருங்கடலாகிய பெருந்துன்பத்தில் ஆழ்த்தும் பாசப்பெருநோய்க்கு அமிர்தசஞ்சீவினி மருந்தாயுள்ள மஹாமந்திரமாகிய பஞ்சாக்கரசொரூபியாய் பிறவிநோய் ஊனமடைய ஊனநடனமும், பேரின்பவாழ் வுண்டாக ஞானநடனமும் செய்தருளும் அருள்மூர்த்தியா யுள்ளவன். இறுதியிலுள்ள அமர்நீதியார், மண்ணினிற் பிறந்ததனாற் பெறவேண்டிய பெரியபய னைப் பெறுதற்கு திருநல்லூரின்கண் வந்து மகிழும் அண்ணலார் அடியார்தமை அமுதுசெய்வித்துப் பாசநிலையைப்போக்கி, மகிழும் அவ்வண்ணலாரது நல்விழாப் பொலிவு கண்ணினாற்கண்டு பசுநிலையைக்கடந்து அருள்வசத்தராய் அன்புநிலையில் நின்று பிறவிப்பெரும்பிணிக்கு அருமருந்தாகிய பஞ்சாக்கரமருந்தை உண்ணுமுறையே யுண்டு நோயைப் போக்குமுறையே போக்கி வாழுமுறையே வாழ்ந்து அழியாப்பே ரின்பநிலையில் பெயராது நின்றவர்.

ஆகவே, பிறவிப்பிணியாளர்க்கு இத்திருத்தொண்டத்தொகையன்றி மருந்து வே றொன்றுண்டோ. மாதவஞ்செய்து முற்றுப்பெற்றார்க்குக் கைதவத்தையும், புல்லறிவை யும், கற்பனையையும், மையலையுந்தீர்த்து அத்துவிதானந்த அகண்டபரிபூரணத்தில் நித்தியமாய் வாழ்வதாகிய பெருவாழ்வினைத்தருவது இதனினும் வேறொன்றுண்டோ.

ஆகலின் பிறவித் தொகையுட்பட்டு உழல்வாரெல்லாம் இத்திருத்தொண்டத் தொகையின் சிறப்பினையுணர்ந்து பிறவித்தொகை யொழியுமாறு ஊக்குறுதி மெய் யன்பால் என்றும் விளம்பி மண்ணினிற்பிறந்த பயனைப் பெற் றுய்வார்களாக.

திருச்சிற்றம்பலம்.

**தில்லைவாழ்ந்தணர் சருக்க முற்றிற்று.**